உ

5376.

கடவுள்துணை.

# அகஸ்தியமாமுனிவர்

அருளிச்செய்த

## பூரணசூத்திரம்-௨௱௰௬.

இஃது,

திருவெண்காடு

## ஆறுமுகசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு,

திருவொற்றியூர்
இருசப்பமுதலியார் - குமாரர்
பரசுராமமுதலியாரது
பாப்பிரமமுத்திராக்ஷரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

௧௮௮௪ (ஹு).







கடவுள்துணை.

# புத்தகவிளம்பரம்.



சென்னப்பட்டணம் சூளை இருங்குன்றம் இலட்சுமிநாராயணபுரம் தொட்டிக்கலை குமாரப்பமுதலியார் வீதியில் ௩௬-வது கதவிலக்கமுள்ளகிரகத்தில் ஸ்தாபித்திராநின்ற பரப்பிரம்மமுத்திராக்ஷரசாலையில் கற்றுணர்ந்த பெரியோர்களால் பிழையறப்பரிசோதிக்கப்பட்டமிகமேலாகிய உபயோகமுள்ள பலவிதவேதாந்தசித்தாந்த வைத்திய ஜோசியசமஸ்கிருத மகம்மதமார்க்கக்கிரந்தங்களும் இன்னும் அனேகவிதமான தமிழ்ப்புத்தகங்களும் விற்கப்படுமாகையால் வேண்டியவர்கள் விலைசாசமாய்ப்பெற்றுக்கொள்ளலாம்.

ஷ ஸ்ரீமகாபாரதவசனமும் ஸ்ரீமகாபாகவதவசனம்-டு அ-சித்திரவிசித்திர லெத்தகிராப் திருவுருப்படங்களுடனும், ஸ்காந்தபுராணவசனமும் ஸ்ரீகம்பநாட்டாழ்வார்செய்த கம்பராயணக்கவி சப்தகாண்டங்களுடனும், அச்சிட்டுக்கொண்டுவருகிறோமாதலால் வேண்டியவர்களுக்கு கூடியவரையில் விலைசாசப்படுத்தி கொடுக்கப்படும்.

ஸ்டாம்பு அனுப்பினாலல்லது பதில்கடிதம் அனுப்பப்படமாட்டாது.

Digitized By Roja Muthiah Research Library



உ

5376

கடவுள்துணை.

# அகஸ்தியமுனிவர்

அருளிச்செய்த

# பூரணசூத்திரம்-௨௱௰௬.

—(*)—

## காப்பு.

ஓடியதோர்தந்திமுகன்றனைப்பணிந்து
　உரைத்திடுவேன்பூரணசூத்திரத்தையாலுங்
தேடியதோர்மந்திரத்தாலஷ்டசித்தித்
　திறமாகவுரைக்கின்றேன்யோகியோர்க்குக்
கூடியதோர்கந்தமணைதச்சிதம்பரத்தில்
　குணமானகாலதனைக்கூட்டிமூட்டி
ஆடியதோரைம்புலனைமூலத்துள்ளே
　அமைத்திட்டமூலகணபதியேகாப்பு.

ஒன்றானபூரணமுமாறுதார
　முரைத்ததற்குமேலாறுந்தொண்ணூற்றாறும்
பண்டானதீட்சைபதினொன்றும்ரெட்டி
　பத்துடனேமுப்பத்திரண்டுதீட்சை
உண்டானசமாதிகற்பம்வாசிநேர்மை
　யுரைப்பானசிவயோகம்பிரணயாவான்

Digitized By Roja Muthiah Research Library

நன்முனைவாதத்தின்தீட்சையோடே
நலமானசவுக்காரத்திறவுகோலே.

திறவுகோல்முன்னுரைத்தநூல்கட்கெல்லாஞ்
செய்பாகங்கைபாகந்தீட்சைப்பாகம்
அறைகிறேன்சரிதையொடுகிரிகைமார்க்கம்
அப்பனேமுனிசித்தர்நூல்கட்கெல்லா
மறைபுகழாய்ச்சொன்னதெல்லாம்வெளியாப்பாடி
மாட்டினேன்பூரணசூத்திரத்திற்காணும்
இறையளவுந்தப்பில்லைமறைப்போவில்லை
யிருநூற்றுப்பத்தாறுஇந்நூல்காணே.

## நூல்.

காணப்பாவிந்நூல்போலொருநூலில்லைக்
காசினியிலிந்நூலைக்கண்ணிற்காட்டார்
பூணப்பாவைம்பதுக்குள்பூநீர்வித்தை
பூட்டினேன்வயித்தியத்திற்புகழோமெத்த
நாணப்பாவொருநூற்றுவைம்பதுக்குள்
நலமானசூட்சத்தைநாட்டினேன்பார்
பேணப்பாமுந்நூற்றில்கர்மதர்மம்
பேசினேன்தீட்சைவிதியிருநூற்றுள்ளே.

உள்ளானபூசைவிதியிருநூறுக்கும்
உத்தமனேமுந்நூற்றில்செந்தூரங்கள்

## பூரணசூத்திரம்.

விள்ளவே ஆயிரத்திருநூற்றுள்ளே
விளக்கினேன் கருவெல்லாம் வெளியாய்ப் போச்சு
எள்ளளவுந் தப்பில்லை மறைப்போவில்லை
மெய்யது மென்ற கருவெல்லாம் இதிலே மெய்யதாம்
கள்ளடா கள்ளருக்கு இந்த நூலைக்
காட்டாதே பன்னிரண்டுங் காத்தாலியே. ௮

### ஆறுதாரம்;

ஈவதுதானுருக்கு சிவயோகிக்கு
இகத்திலுள்ள மாண்பருக்கு ஈய்ந்தாயானால்
நோய்மிகுந்து சாவாரே சொன்னேன் மைந்தா
நுண்மையாய் மனதில்வைத்து நுணுக்கங்கண்டு
தாய்பதத்தைப் பூசித்துக் கற்பங்கொண்டு
சமாதிக்குளிருந்துணைத்தித் தலைவனாகி
சீமலைமேலேறிவிடு லோகத்துள்ளே
நின்றுக்காற்கொல்லுமடா நிசஞ் சொன்னோமே. ௯

### மூலாதாரம்.

நிசமான பூரணத்தைச் சொல்லக்கேளு
நின்மலத்தாயென்றனுக்கு உபதேசித்தாள்
விசமான அடிமூலங் கணேசர் கோயில்
வட்டமாம் மங்கோணந் திரிகோணத்தில்
நிசமான கணேசரொடு வல்லபையுங் கூட்டி
யிருக்குமடா ஓம்ங்கிலீயுமென்று

Digitized By Roja Muthiah Research Library

வசமானஅங்சிவாகணபதிதேவாவென்று
வாழ்த்தடாகுண்டலித்தாய்வணங்குத்தானே.
வணங்குவதுக்கிப்படிசீசக்கரத்தை
வரிசையாய்க்கிறியேயட்சரங்கள்
பிணங்காமல்ஈங்காரம்நடுவேயிட்டு
போனகோணமைந்திலேந்துமிட்டு
இணங்கவேதுபனைவேத்யத்தோடு
இலட்சமுருவேற்றிடக்குண்டலிதானென்றும்
கணமானகணபதிதான்பிரகாசிக்குங்
கயிலாயப்பாகதியைக்காட்டுந்தானே.

சுவாதிட்டானம்.

காட்டுவதுநாற்கோணமதன்மேல்பா
கருதுவதுவிருகோணமுக்கோணவட்டம்
பூட்டுவதுபிரமனொடுசரஸ்வதியுங்கேளு
புகலுவேன் ஙங்மங் ஸ்ரீம்ஐம்அங்பிரமதேவாவென்று
கூட்டுவதுலட்சமுருவேற்றுதற்குக்
குறிசொல்வேன்நாற்கோணம்நாலெழுத்துமிட்டு
நீட்டுவதுவிந்துவிலேஅங்கென்றிட்டு
நிலையாகப்பூசிக்கமுத்தியாமே.

மணிபூரகம்.

முத்தியாம்பிறைநடுவேமுக்கோணமிட்டு
மூர்க்கமாமகாரமொடுஉகாரமிட்டு

பத்தியாம்ஓங்காரம்ஸ்ரீங்காரங்கூட்டிப்
பச்சைவர்ணமூர்த்தியென்றேபகர்ந்ததுசேவி
சத்தியாமட்சரங்கள்நடுவேயிட்டு
சாற்றுவாய்லட்சமுருத்தானேயாகில்
வெற்றியாங்குண்டலியும்மேலேயேறும்
வேதாந்தபூரணத்தில்சேர்க்குந்தானே.

அநாகதம்.

சேர்க்கின்றமுக்கோணமுருத்திரமூர்த்தி
திகழான அறுகோணமுன்னேயிட்டு
ஆர்க்கின்றவிந்துவதினடுவேயிட்டு
அளவானசிகாரமொடுமகாரமிட்டு
பார்க்கின்றஸ்ரீங்காரஓங்காரந்தான்
பகர்கின்றவகாரமொடுகிலியுங்கூட்டி
நீர்க்கின்றருத்திரத்தேவாவென்று
செபிக்கவேவாசியதுயேறும்பாரே.

விசுத்தி.

பாரடாலட்சமுருவேறிற்றானால்
பகருமறுகோணத்தில்விந்துவிட்டுச்
சேரடாவகாரமொடுஓங்காரந்தான்
சிறப்பானஸ்ரீங்காரஞ்சிவாயநமவென்று
நேரடாமயேசுவரதேவாவென்று
செபித்திடவேயிலட்சமுருதிறமாய்த்தானே

ஆடாவுணக்கிடுவாசிசித்தி
யாறெழுத்துமறுகோணத்தறைந்திட்டேனே. ௰௪

ஆக்கினை.

அறைந்திட்டமூன்றெழுத்துநடுவேபோடு
அருளானசதாசிவத்தினருளைப்பாரு
மறைந்திட்டவிந்துவிட்டுநடுவேகேளு
விதமானவைங்கோணமுக்கோணந்தான்
உறைந்திட்டசோட்சந்தானைந்துங்கூட்டி
யுறவானஅங்கிஷ ஐம் ஓம் என்று
பறைந்திட்டசதாசிவதேவாயாவென்று
பகருவேணிலட்சமுருபரிந்துநோக்கே. ௰௫

நோக்கடாவைங்கோணமைந்துமிட்டு
நுணுக்கமடாவிந்துவுக்குள்முக்கோணத்தில்
ஆக்கடாஅம்அங்கிஷ ஐம் ஓமென்று
அப்பனே ஸ்ரீங்கார மிட்டுச்சேவி
மூக்கடாபாயாதுவாசிதானு
மூகயமடாமேல்மூலத்தூணிப்பாரு
நாக்கடாஅமுர்தமதுஇழிபாயும்
நலமாகஇழாழுநவின்றிட்டேனே. ௰௬

மேலாதாரம்.

அக்கினிமண்டலம்.

ஏனென்றவாதாரமேலேயாறு
மிய்ம்புகறேனன்றுகவியல்பாய்த்தானே

Digitized By Roja Muthiah Research Library

தேமென்றசதாசிவத்தின்மேலேகேளு
　　தியானமண்டலந்தான்திரிகோணமாகி
ஊமென்றமண்டலத்தில்திரிகோணத்துள்
　　வைத்திடுவாயகாரமொடுசவ்வுந்தானே
காமென்றமலமறுக்குமக்கினிமண்டலத்திற்
　　கண்டிப்புவற்றவிடுங்கனலிற்றானே. ௰௪

கனலிலேவாயுவந்துபுக்கிற்றானாற்
　　கண்திறந்துவமுர்தமதுகனிந்துபாயும்
புனலானவமுர்தமுண்டால்காயமீறும்
　　போச்சுதடாநரைதிரையும்புதுமையாச்சு
அனலிலேவெந்ததொருபாண்டந்தானு
　　மசையுமோநீருக்குவதுபோலப்பா
நினலிலேயித்தியானமூட்டிமூட்டு
　　நிச்சயமாய்சமாதிக்குள்நிலைக்குந்தானே. ௰௫

## சூரியமண்டலம்.

நிலையானவழற்குள்மண்டலத்துக்கப்பால்
　　நேரானசூரியமண்டலத்தைக்கேளு
இலையானவிந்துவடாஉகாரமிட்டு
　　செபித்திடுவாய்சூரியனோகோடிகாந்தி
மலையாமல்வாயுவதிற்சேர்ந்ததானால்
　　மைந்தனேயுன்றுடலிற்பிரகாசத்தைக்
கலையானசூரியனைப்போலாந்தேகங்
　　கல்மிஷங்களில்லையில்லைக்காணுங்காணே. ௰௬

Digitized By Roja Muthiah Research Library

## சந்திரமண்டலம்.

தோணுகின்றசூரியமண்டலத்துக்கப்பால்
கலைமதியாஞ்சந்திரமண்டலத்தைக்கேளு
தோணுகின்றசோதியடாமெள்ளவீடு
சொல்லரிதுசொல்லுகிறேன்அங்கென்றாலு
பேணியேசெபித்திடவேசோதிகோடி
பிரகாசமாயிடுங்காண்பெருமைபேசார்
ஆணுவங்களற்றதடாஅரூபாரூபம்
அக்ஷரங்களற்றவிடமறையக்கேளே. ௯

கேளப்பாஓங்காரமதன்மேல்நிற்குங்
கெடியானவைந்தும்மூன்றெழுத்துமீதில்
நாளப்பாபஞ்சகர்த்தாளைவரீதில்
நலமானஆன்மாஜீவகளையுமீதில்
வேளப்பாஓமென்றுதியானஞ்செய்ய
வித்தானபிறவியெல்லாமற்றுப்போச்சு
சூளப்பாபிறவியுமிவ்வளவேயாச்சு
துலங்கிநின்றபூரணத்தைச்சொல்லப்போமோ ௧௦

## ஏகாட்சரம்.

போமென்றபூரணமுமிதுவேயாச்சு
பூரணமாஞ்சூட்சத்தைப்புகலக்கேளு
நாமென்றஅகாரத்தில்உகாரமிட்டு
தனித்துநின்றஓங்காரஞ்சுற்றிக்கட்டு

Digitized By Roja Muthiah Research Library

வாமென்றவதின்கீழேமகாரமிட்டு
மகாரத்தின்மேலேறிஅகாரத்துள்ளே
ஊமென்றறிங்காரம்நடுவேயிட்டு
யுயரவேசூலமிட்டுசிங்கிவங்கே.

வங்கென்றுஇருபுறமும்வைத்தாயானால்
மைந்தனேசூக்ஷமதுவசூக்ஷம்
பங்கென்றபூரணமுமிதுவேயாச்சு
பகருகின்றமந்திரமுமிதுவேயாச்சு
தங்குமேசடாக்ஷரமுமிதுவேயாச்சு
தருவானஎட்டெழுத்துமிதுவேயாச்சு
அங்குபஞ்சாக்ஷரமுமிதுவேயாச்சு
ஆதியென்றமூன்றெழுத்துமிதற்குள்ளாச்சே. ௨௰

ஆச்சடாதசதீக்ஷையிதனுக்குள்ளே
அண்டசராசரங்களெல்லாமிதனுக்குள்ளே
பேச்சடாவொன்றுமில்லையிதனையல்லோ
பெரியோர்களுரையாமல்மறைத்தாரடா
வாச்சடாஐம்பூதமிதனுக்குள்ளே
மதியிரவியானதுவுமிதனுக்குள்ளே
காச்சடாஅண்டமொடுபுவனமெல்லாங்
கலந்துநின்றவத்துவிதங்கண்டுகொள்ளே. ௨௧

கண்டுகொள்ளுமிவ்வெழுத்தைக்கற்பமெட்டில்
கண்ணப்பாபதிற்றுடனேகர்மமாடுங்

Digitized By Roja Muthiah Research Library

கண்டுகொள்ளுமிவ்வெழுத்தை யாதாரத்தில்
கர்மமாந்திவினைகள்காணாதோடும்
கண்டுகொள்ளுமிவ்வெழுத்தை யாதாரத்தில்
கட்டாகவைத்துடனேவாசியேறுங்
கண்டுகொள்ளுமிவ்வெழுத்தைப்பெரியோரெல்லாங்
கட்டினார்நூல்தோறுங்காணாதென்றே. ௨௨

காணாதாணுமல்லப்பெண்ணுமல்ல
கருதிப்பாரலியுமல்லகருதிச்சொல்லத்
தோணாதுவுருவொன்றுமருபாருபந்
துலங்கிநின்றபூரணத்தைச்சொல்லிவிட்டேன்
தோணாமல்நின்றவரேகுருவைக்காண்பார்
குருக்காணாரானேகண்டகுருடாகு
மாணவாதாரதிட்டையாறு
மப்புறத்தில்நின்றதொருஆறுஞ்சொன்னேன். ௨௩

ஆறுறுபன்னிரண்டுதலமுஞ்சொல்லி
யதில்நிற்குமட்சரஞ்சக்கரமுஞ்சொல்லி
வீறுதவாசியதுவுற்றுஞ்சொல்லி
யேகாட்சரபூரணமுமெடுத்துக்காட்டி
கூறுதகருவையெல்லாங்கூறினேன்யான்
கூற்றனின்றவிடமிதுதான்குறித்துப்பாரு
தேறுதபேருக்குந்தேறுந்தேறுஞ்
சிவசிவாபூரணத்தின்திறந்தான்காணே. ௨௪

# சிவதீட்சைபதினொன்றின்விபரம்.

## ௧-௨-தீட்சை.

திறமானதீட்சையதுவழியதாகச்
செப்புகிறேன்சிவதீட்சைபதினொன்றுந்தான்
கறவாதேகறந்ததொருபால்போலப்பா
காசினியோர்பிழைக்கவென்றுகருவைச்சொன்னேன்
மறவாதேநீகேளு அம் உம் சிம் வம் பம் ஓமென்று
வளர்த்துவாய்முதற்றீட்சைமருவிக்காணும்
நிறைவாக அவ்வும் மவ்வும் ஓம் நமசிவாயாவென்று
நிகழ்த்துவாயிரண்டானதீட்சைதேரே. ௨௫

## ௩-௪-தீட்சை.

நேரானமூன்றுக்தீட்சைகேளு
நிச்சயமாய் உம் அம் சிவ சிவாயமென்று
வேரானவொமென்றுசெபித்தாயானால்
வெற்றிபடாமூன்றானதீட்சையாச்சு
பாரானநாலானதீட்சைகேளு
பகருவேன்சிவாயநம ஓம் ஐயென்று
சீராகச்செபித்திடுவாயைந்தாந்தீட்சை
செப்புகிறேனன்றாகத்தெளிந்துகொள்ளே. ௨௬

## ௫-௬-௭-தீட்சை.

தெளிவாகவைந்தானதீட்சைகேளு
சிவசிவா அவ்வும் உவ்வும் சவ்வும் ஓம் என்று

ROJA. MUTHIAH
ARTIST
Digitized By Roja Muthiah Research Library

களிவம்மாயாரூனதீட்சைகேளு
சுவிலுகிறேன்மவ்வும்உவ்வும்நமசிவாயா
குளிர்வாகவும்என்றுசெபித்தாயானால்
கூறுவேன்ஞானதீட்சைமார்க்கம்
எளிதாககிலீம்நமசிவாய அவ்வும்ஓமென்றே
யேற்றுவாமெட்டானதீட்சையெண்ணே. உள

அ-கூ-தீட்சை.

எண்ணவே ஓம் ஸ்ரீயும் சிவ அங்கிஷாயா
யென்றுதான்செபித்திடுவாயெட்டாந்தீட்சை
பண்ணவேயொன்பதாந்தீட்சைகேளு
பரிவானசிவாயநம அம் உம் ஓமென்று
உண்ணியேயோதிடவேபத்தாந்தீட்சை
யுரைத்திடுவாய்பதினொன்றாந்தீட்சையோத
நண்ணவேமுன்டவுனட்வகதீட்சை
நாட்டினேன்பூரணத்தைநயந்துபாரே. உஅ

ஆதாரம்பனிரண்டின்தீட்சைவிபரம்.

பாரப்பாதீட்சையதுபதினொன்றுந்தான்
பரிவானஆதாரம்பனிரண்டுக்கும்
நேரப்பாவொவ்வொன்றுக்கொன்றேதீட்சை
நிறுத்தியேயாதாரம்நிலைததுப்பாரு
சீரப்பாபன்னிரண்டுக்கொன்றேதீட்சை
செப்பினேன்பூரணத்திற்செப்பினேன்யான்

Digitized By Roja Muthiah Research Library

ஆரப்பாதீட்சையொன்றுக்காதாரமொன்று
ஆண்டொன்றுதீட்சையொன்றமுத்திப்பாரே ௨௬

## சத்திதீட்சைபதினொன்றின்விபரம்.

### ௧-௨-௩-வாலைதீட்சை.

அழுத்தமாய்சத்தியுடதீட்சைபதினொன்று
மறைகிறேன் உம் ஆம் மம் ஓமென்று
வழுத்தவேவாலையுடதீட்சையாச்சு
வரிசையாயிரண்டானதீட்சைகேளு
பழுத்ததொரு யம் ஈம் அம் உம் மம் ஓமென்று
பரிவாகவோதிடவே பலிக்குஞ்சித்தி
எழுத்தாகுமூன்றானதீட்சைகேளு
ஈம் ஓம் அம் உம் மம் என்றிதனையோதே. ௨௭

### ௪-௫-௬-௭-தீட்சை.

ஓதவேநாலானதீட்சைகேளு
உம் மம் அம் ஈம் ஐம் ஓம் என்றோது
தீதமாமைந்தானதீட்சைகேளு
கிலீம் ஓம் மம் அம் ஐயென்று கிருபையாக
வேதமாமாறானதீட்சைகேளு
விளங்கவே ஓம் வம் ஈம் விதமாய்த்தானே
நீதமாமேழானதீட்சைகேளு
நிலைத்ததொரு ஸ்ரீம் ஈம் அம் ஐயுமென்றே. ௨௮

Digitized By Roja Muthiah Research Library

## அஷ்டம்·தீட்சை.

என்றுநீயெட்டானதீட்சைகேளு
விம்புவாய் சவ்வும் அவ்வும் மவ்வும்ஓமென்று
நன்றுநீயொன்பதாந்தீட்சைகேளு
நம் மம் சிம் வம் ஐம் ஓம் நலமாய்த்தானே
யென்றுநீபத்தாந்தீட்சைகேளு
உம் மம் சம் ரீம் ஓமென்றுறவாய்த்தானே
சென்றிடவேபத்துந்தான்தேவிதீட்சை
திறமாகதேவிபத்துந்தெளிந்துபாரே. ௬௨

## ஏகதீட்சை.

பாரென்றேன்பதினொன்றுந்தீட்சைகேளு
பகருவேன் ஓம் றீம் சும் மம் என்றேதான்
கூறென்றபூரணமாமேகதீட்சை
பூட்டினேனுதாந்தீட்சையுள்ளே
நேரென்றேன்பூரணமாம்வாலைதீட்சை
நிகழ்த்தினேன்கண்டுகொள்ளுநிசமதாகத்
தேரென்றேன்தீட்சைபத்துமாத்ரைக்குள்
திறமாகவொன்றுக்குவேறுடனொன்றே. ௬௩

## தீட்சைசெய்யார்க்கம்.

ஒருடமாந்தசவருடமாருசெய்வார்
மைந்தனைசித்தரொடுமுனிவர்செய்வார்
பரிசுமாயுலகத்திலுள்ளபேர்கள்
பத்திகொண்டவர்களுக்கேதக்கமாட்டார்

Digitized By Roja Muthiah Research Library

அரிதயாயுரைத்தானுக்குருக்காணாது
சொல்லுதற்குவுரைப்பார்கள்நூல்காணாது
புருஷமாய்கோர்வைநூல்கிட்டாவிட்டால்
போக்கென்னவாசையென்னபொய்யதாமே ௬௩

நூலின்மகத்துவம்.

பொய்யாமலிருக்கவென்றாலிந்நூல்வேணும்
புகலரியதிட்சைக்கும்யோகத்துக்கு
மெய்யானகற்பமுதல்காயசித்தி
விருதானவாதவித்தைகுளிகைசித்தி
கைபாணைமுறைகள்வாததீட்சைக்
கருவானமறைப்பென்றசெய்க்காரப்போக்கு
உய்யாமனூல்களிலேயொளித்தபாக
மொளியாமலெடுத்துரைத்தேனுண்மையாமே. ௬௪

நூலின்மார்க்கம்.

உண்மையாமிந்நூல்தான்கிட்டாத்தோஷம்
உலகத்தின்மாணிடர்களுளரிப்போனார்
தண்மையில்லாவிந்நூல்யார்கொடுக்கப்போறார்
சாத்திரந்தான்மெத்தவுண்டுசமுசயந்தீரா
வெண்மையாய்ச்சட்டைமுனிதீட்சையிருநூறும்
விளம்பினேன்வெளியாகவென்றுமேலர்
அண்மையாய்க்கிழித்தாரேஐயோவையோ
அல்லமலின்னமொழுகுகந்தேள. ௬௫

Digitized By Roja Muthiah Research Library

சாபவரலாறு.

ஆமெங்கள்பாடுமுன்னோநவசித்தாதி
பதின்பிறகுநவகோடிகோடாகோடி
பாகமுடனுச்சுதென்றுபேசிக்கொண்டு
பாமசிவன்சாபமிடப்பாலித்தார்காண்
வேகமாய்சாபமிட்டோம்வாமத்துக்கு
மியலானவட்சாங்கள்தீட்சைமார்க்கம்
போகமாயுயிர்களைத்தான்வாங்கிப்போட்டோம்
போட்டதனால்நூல்களெல்லாம் பொய்யாய்ப்போச் (சே

நூல்சித்தி.

போச்சுதென்றலைபாமல்சிவனுத்தாரம்
பூட்டியேகேட்டுநானிந்தநூலில்
ஆச்சுதென்றுமறைத்ததெல்லாமருளிச்செய்தே
னாகாசாபங்கள்நிவிர்த்திசெய்தேன்
மூச்சுதென்றுபோகாமல்முறைதப்பாமல்
முன்னேதோபின்னேதோவென்றெண்ணாமல்
காச்சுதென்றுகாச்சிவிட்டேனுலகத்துள்ளே
கண்டவாக்கிநூல்சித்திமுத்தியென்னே ௧௮

நாலியாமை.

முத்தியிதுமோட்சமிது சித்திகோடி
முக்யமிதுசித்தருக்குங்காட்டொணாது

Digitized By Roja Muthiah Research Library

சத்திபிதுசம்புவிதுவொன்றாய்ச்சொன்னேன்
சகலநூற்கெல்லாந்தான்குருநூலப்பா
எத்தினர்சாபத்தைநிவர்த்திசெய்து
எத்தினால்தீட்சைதானெளிதிலாகும்
புத்தியுடனிந்நூல்தானோர்க்குங்கிட்டாப்
புண்ணியர்க்கேஇதுகிடைக்கும் பொருளேப்பாரே.

சாபநிவர்த்தி.

பொருளானசாபங்கள்நிவர்த்திசெய்யப்
பூட்டினேன்சர்பமதுபொய்யாய்ப்போக
அருளானசிவாயநமஅம்உம்என்று
அப்பனேசிம்கிலீம்ஸ்ரீம்ஓம்சியென்று
மருளாமல்ரம்மம்யம்ஓம்என்றேதான்
மாட்டுவாயிலட்சமுருவேறிற்றால்
இருளானசாபங்கள்நிவர்த்தியாகும்
ஏகமாய்ச்சொல்லிவிட்டேனியம்பக்காணே. ௨௰

வயிரவர்தியானம்.

இயம்புவேன்வயிரவன்றன்தியானங்கேளு
இயல்பாக்ய்ம்க்ம்லம்க்ஷம்சிங்கென்றேதான்
சயம்பாகஷங்லங்மங்கென்று
சாத்தியமாம்வயிரவத்தினமந்தானே
நயம்பெறவேயெண்கோணமிட்டுத்திரு
நாட்டுவாய்வஸ்துவொடுசுத்திவைத்து



Digitized By Roja Muthiah Research Library

செயம்பெறவேபூசைசெய்வடமாலைசாத்தி
சித்திக்குஞ்செய்தொழில்கள்திறமாய்த்தானே ()

சுப்ரமண்யர்தியானம்.

திறமாகசுப்ரமண்யர்செபத்தைக்கேளு
செயமாகுமெந்தனுடகுருதானப்பா
அறமாகஅம்உம்ஓம்ஸ்ரீம்ஹ்ரீம்சம்வம்சரவணபவதேவாயா
அறுமுகவாசிவசுப்ரமண்யநமாவென்று
உறவானஅறுகோணம்நடுவேவிந்து
உத்தமனேவிருத்தமொன்றுவாசல்நாலு
நிறமானநால்வாசல்வீரபாகுதேவா
நிச்சயமாய்வைத்துநீபூசிப்பாயே ௬௨

அகஸ்தியர்தியானம்.

பூசிப்பாய்பானமொடுசுத்திவைத்துப்
புகழானசாதிபுஷ்பம்புழுகுபூரம்
ஆசிப்பாய்சுப்ரமண்யர்சித்தியாகு
மப்பனேகேட்டதெல்லாமருளிச்செய்வார்
நேசிப்பாயென்னுடையதியானந்தன்னை
நினைத்திடவேசித்திவந்துநிலைக்கும்பாரு
வாசிப்பாய்ஓம்சிம்வம்அம்உம்மம்தான்
மகத்தானஅகத்தீசாவென்றுகூறே ௬௩

பிராணயம்.

கூறிடுவாயென்குருவேநந்தியென்று
கோணமுமாமுக்கோணஞ்சுழிமுனைமீது

ஏறுவாய்பிராணாயம்வாசியேறும்
இடகலையாஞ்சந்திரனிலேறுயேறு
பேறுபெறவேண்டிலறுலட்சந்தீரு
பிராணாயஞ்சித்தியடாயோகசித்தி
ஆறுடனேயாறுகும்பன்னிரண்டும்
அப்பனேபூரணத்திலடங்கிப்போமே ௫௫

## தூலநிலையாமை.

அடங்கினலாறுதலம்வெளியாய்க்காணு
மதீதமென்றமேலறுபூரணமுந்தோன்றும்
தூடங்கினல்சிவயோகந்துடங்கவேணும்
துரியாதீதந்தனிலேநிற்கவேணும்
தூடங்கினல்கூடுவிட்டுச்சீவன்போனல்
நோக்கினதிற்பிறக்குமென்று சொன்னார்முன்னோர்
அடங்கினலொன்றுமில்லைவருவதேது
அச்சடத்தைவாழ்வித்தாலவனேசித்தன் ௫௬

## பிறவிவருதல்.

சித்தனைப் பிறப்பதுதானென்றக்கால்
செகத்திலேகோடியிலேபொருவனுண்டு
உத்தமொருவிட்டகுறையென்பதென்ன
வுதித்தகலையெங்கேநாமுணிப்பாரு
பெற்றபேறெப்படித்தான்வந்ததானல்
பிரணலலோபூரணத்திற்சேர்ந்ததாலே ௫௭

Digitized By Roja Muthiah Research Library

முத்தனுமெடுத்தசடஞ்சித்தியாகு
முன்னுமில்லைப்பின்னுமில்லைமுறையைப்பாரே ( )

கற்பமுண்ணு முறைமை.

முறையாகக்கற்பத்தைச்சொல்லக்கேளு
மூதண்டமேலகியமும்அயக்காந்தந்தான்
திறையாகவறுசுவையுங்கழற்றுமுன்பே
தரிதமாய்க்கொண்டுவிடுமண்டலந்தான்
நிறையாகவல்லாரைவருஷமொன்று
நேயமாய்க்கொண்டபின்புகடுக்காய்கொள்ளு
அறையாமலதின்பிறகுமிளகுகொள்ளு
அதின்பிறகுகொங்கணர்சொல்முறையைக்கொள்ளே

வல்லாரைவிபரம்.

கொள்ளுதற்குவல்லாரைமுறையைக்கேளு
குழிவெட்டிக்கருப்பேற்றிப்பயிரேசெய்து
விள்ளுகிறேனிதையெடுத்துக்காடிவார்த்து
வெண்மைபெறக்கழுவியேநிழலிற்போடு
உள்ளுறவேயுலர்ந்தபின்புபிடித்துத்தூளா
யுத்தமனேபுதுக்கலசந்தனில்வைத்து
தெள்ளுறவேகாடியிலேதின்னவேணுஞ்
செப்புகிறேன்காடிவைக்கச்செய்கையென்னே ( )

காடிவைப்பு.

என்னவேகருங்குருவைநெல்லைக்குத்தி
யிடலானபுதுப்பானைதனிற்சமைத்து

Digitized By Roja Muthiah Research Library

உண்மையாய்ச்சுத்தசலமதனில்வார்த்து
வைத்திடுவாய்மண்டலந்தான்வேடுகட்டி
சொன்னதொருவெய்யிலிலேதினமும்வைத்துச்
சுருதியாய்மறுபானைபகுந்துமூடி
மூன்னுள்ளபாண்டத்தையனலிற்காச்சி
முறையாகவதிலிட்டுசுத்தசலம்வாரே சஎ

காடிமகத்துவம்.

செலம்வார்த்துப்பின்னுமதைதாழியில்வைத்துச்
செய்திடுவாய்மண்டலத்துகசொருசோறுக
நலமாகவெவ்வேறேபகுந்துகாச்சி
நாட்டியேவெயிலில்வைத்தஆறுமாதம்
பெலமானகாடியிதுவல்லாரைக்குப்
பேசாதேயிக்கருவைப்பெரியோர்சொல்லார்
அலையாமல்வல்லாரைச்சூரணத்தை
யழகானபுன்னைக்காயளவுகொள்ளே சஅ
கொள்ளடாசமாதியிலேயிருக்கும்போது
கூறுகப்பூசித்துதீட்சைபெற்று
விள்ளடாவெயிலுடனேகாற்றுமாகா
மேனியதுவுலவாகாகிலேசமாகா
தள்ளடாவெண்ணெய்சுண்ணம்கடுகுவுள்ளி
தாரணியில்பெண்மாய்கைசற்றுமாகா
தள்ளடாவாகாறுகஞ்சாவாகா
காசினியின்மீன்இறைச்சியாகாதே சகூ

Digitized By Roja Muthiah Research Library

அடக்கம்.

நீக்குவதுபுளியோடுஇலையுமுப்பும்
நிலையானவுறக்கமொடுகோபமாகா
ஆக்குவதுசுணையாகாபொய்யுமாகா
அப்பனேமனமொன்றாய்ப்புத்தியொன்றாய்த்
தாக்கவருமாய்கையெல்லாமடித்துத்தள்ளு
சதாநித்தம்பூரணத்திலகலாமல்நில்லு
போக்குவதுபாத்தையேநீபோக்கினைக்கால்
புக்ஞானசிவயோகம்புனிதமாமே ருஉ

யோகநித்திரை.

புனிதமாயுறங்கவென்றால் வலக்கைமேலே
பூட்டாககால்நீட்டிப்பூரணத்தைநோக்கி
மனிதமாய்கேசாத்தில்மனதைவைத்து
அப்பனேவாடத்தேதூங்கவேணும்
மனிதனாய்ப்பிறந்தக்கால்சாகாக்கல்வி
வாசிக்குஞ்சிவயோகவாழ்க்கைசேர்வான்
செனிதமாஞ்சண்டாளப்பிறமோர்க்ள்
செத்திறந்துசெனிப்பார்கள்செகத்திற்றனே ()

கற்பத்துக்குப்பத்தியபாகம்.

செனியாமல்கற்பங்கள்கொள்ளும்போது
திரிகடுகுதிரிபலையுஞ்சிரகம்ஓமம்
தனியானசாதிக்காயசிறும்புபத்திரி
கருவேப்பிலையோடுஆவினெய்பால்

Digitized By Roja Muthiah Research Library

தனியானசருக்கரைதேன்வாகுருவையரிசி
சதுரானதூதுவளைபுளியாரையோடு
கனியானசிறுகிரைசிறுபயறுமாகும்
கட்டியதோருப்பாகுங்கொருக்கையாமே ருச

## கடுக்காய்க்கற்பம்.

ஆருமேகற்பூரச்சிலையின்சுண்ணம்
அண்டமொடுகல்நாருந்தங்கச்சுண்ணம்
வாருடனேயான்சொன்னேன்மற்றொன்றுயாநா
வகையாகஇந்தமுறைகற்பங்கொள்ளு
மோகமாய்க்கடுக்காயின்முறையைக்கேளு
முயல்வாகச்செங்கடுக்காய்பொற்காய்வாங்கி
பாகமாயிடித்ததனைச்சூரணித்துப்
பாச்சுதற்குசிற்றேரண்டெண்ணெய்வாங்கே ருரு

## நயனக்குறி.

எண்ணெயதுவுழக்கடாபொடிதானாழி
யியல்பாகவிட்டதனைமைபோற்கிண்டி
கண்ணுனைபீங்கானில்பதனம்பண்ணி
கனமானபுன்னைக்காயளவுகொள்ளு
விண்ணதனைநித்தநித்தங்கண்ணோட்டம்பார்
வெள்ளிற்குனைசுழினையிலேவாசியேறும்
கண்ணதனைமுறுக்கியேயேறப்பாரு
கபாலத்தில்அமுர்தமதுகனிந்துபாயும் ருசு

Digitized By Roja Muthiah Research Library

கபசுத்தி.

பாயுமேசுழினைதனைத்திறப்பதற்குப்
பகருகிறேன்கற்பமொன்றுயரிவாய்த்தானே
காயுமேகரிசாலைச்சாறுநாழி
கருதியதோர்நெய்நாழிகலந்துகாச்சி
வாயுமேமெழுகுபதந்தன்னிலேதான்
வடித்துவைத்துக்கைப்பெருவிரலிற்றடவிப்
பாயுமேயுண்ணாக்கிற்றாளவைத்துப்
பழகவேகபமெல்லாமற்றுப்போமே ருஎ

மூலசுத்தி.

அற்றுவிடும்இரண்டுவிரல்வாயிலோட்டி
யன்லானகபமெல்லாமகக்குங்கக்கு
மற்றுமினிமூலத்தின்சுத்திகேளு
வாகானகுமரிச்சாற்சிற்றேரண்டெண்ணெய்
யுற்றதனைமுன்போலேகாச்சிக்கொண்டு
வுறவாகநடுவிரலில்தோய்த்துக்கொண்டு
சுற்றிவிடுமூலத்தின்மலமெல்லாந்தான்
சுகமாகக்கீழ்நோக்குஞ்சுத்தியாமே ருஅ

குறி—மிளகுகற்பம்.

சுத்தியாயிருநேரம்நாட்டம்பாரு
சுழிதிறக்கும்பூரணத்தில்சொக்கிப்போமே
புத்தியாயமுர்தங்கொண்டிறந்துபாயும்
பாவிகட்குமிக்கருவைப்பகராதேமோ

Digitized By Roja Muthiah Research Library

வெற்றியாமிளகினுடகற்பங்கொள்ள
விபரமதைச்சொல்லுகிறேன்விரித்தானன்றாய்ச்
சித்தியாங்கன்மிளகாய்த்தெரிந்தெடுத்துச்
சிறப்பானவமுரிதனைத்தேத்தாம்வித்தால் ௫௩

மிளகுசத்தி—மூதண்டம்.

வித்தாலேமுறிக்குதனைத்தெளியவைத்து
விசமா ஐயங்காயததினைமுமேற்று
முத்தானவமுரியுடன்கொள்ளும்போது
முக்யமடாநாலுக்குமதிகம்வேண்டாம்
கொத்தாளைஉவடணைந்தான்மிஞ்சிற்றானால்
கூறிலொருபடியாகுஞ்செலத்திலுள்ளே
சித்தானஅறுகின்வேர்பிடிதானென்று
சொல்லுகிறேன்மிளகுதானிருபத்தைந்தே ௫௪

மூதண்டமகத்துவம்

அஞ்சாமற்காய்ந்ததுசனுமூக்கேயாறு
லப்பனேபசுவெண்ணெய்பாக்களவுபோட்டு
மிஞ்சாமற்கொண்டிடவேவெப்புத்தீரும்
விருதாகியாழ்பிதுமெத்தநன்று
நஞ்சுண்டசிவனன்றுகற்பங்கொண்டு
நாதனார்சடைம்துதரித்தகற்பம்
பஞ்சகணபதிமூலவறுத்தப்பா
ப்ர்த்தர்க்கரிலிதண்பெருமைப்பகொண்ணுதே

Digitized By Roja Muthiah Research Library

மறுகற்பம்.

ஒன்றான அயக்காந்தங்கொண்டபின்பு
 வுத்தமனேயறுசுவையுங்கழற்றிப்போடு
கன்றானவல்லாரைகடுக்காயோடு
 கனமானமிளகோடுமறுகற்பங்கொள்
நன்றானசட்டமுனிசொன்னமார்க்கம்
 நலமாகக்கொண்டுவிடகாயசித்தி
விண்டானகெவுனசித்தியோகசித்தி
 வேண்டியதோரட்டமாசித்தியாமே. சுஉ

கற்பமுண்ணுமுன்பக்குவம்.

ஆமென்றமூலியெல்லாங்கறுப்பேற்றிக்கொள்
 அப்பனேஉன்றிரேகம்பெலத்துப்போச்சு
ஓமென்றகற்பங்களுண்ணும்போது
 வுடலிலேநோய்வந்தால்முந்நூற்றுள்ளே
தாமென்றசெந்தூரம்லேகியங்கள்
 தப்பாமற்செய்துவைத்துப்பின்னேகற்பம்
நாமென்றுநோய்கள்வந்தால்செந்தூரத்தை
 நாட்டிடவேநோய்தீரும்நன்மையாமே சுங

கற்பமுண்ணக்காலம்

நன்மையாய்கற்பங்கள்கொள்வதற்கு
 நல்மானகாலத்தைச்சொல்லக்கேளு
தெளிவானகார்த்திகையுமார்கழியுமாக
 திறமானவறுசுவையுங்கழற்றிப்போடு

Digitized By Roja Muthiah Research Library

கூறுவானவல்லாரைத்தொடுத்துக்கொள்ளு
சுகமானகடுக்காய்தான்ஆணிமாதம்
அழியாமலாணியிலேமிளகுகொள்ளு
அப்பனேயுதையத்திற்சரீரசுத்தி
யொளியாமல்கட்டளையைமுகித்துக்கொண்டு
வுதையாதிமூன்றுக்குங்கற்பந்தின்னே. ௫௯

பத்தியமுண்ணுங்காலம்—கலை,

கற்பந்தான்தின்பதற்குமுன்றேமுக்கால்
கடந்தபின்புபத்தியங்கொள்கனலேறாது
உற்பனமாங்கற்பத்தைச்சூரியனிற்கொள்ளு
உண்பதுவுமுறங்குவதுமொன்றேமார்க்கம்
நற்புடனேபூசைசெய்வார்காலமூன்றும்
நாளொன்றுக்கிருநேரம்நாட்டம்பாரு
சொற்பமென்றபெண்ணாசைவிட்டாலுந்தான்
சுகமானசயனத்திற்பெண்தான்வந்தே ௬௦

சயனமாய்கை—வாசிகுறி.

வந்துதான்மருவிடவேவிந்துவிழு
மகத்தானதபமெல்லாமழிந்துபோகும்
கொந்துதானழியாமல்நினைவாய்த்தூங்கு
குறியானபுருவமையங்குறியைப்பாரு
வெந்துதான்போகுமடாமூலத்தீதான்
மேற்கொண்டால்மாயையெல்லாம்வெளியுமாகும்

Digitized By Roja Muthiah Research Library

உந்தித்தான்பசியாமலிருக்கவென்று
றுறைப்பானவாசிகொண்டுவமுர்தமுண்ணே சுஅ

சற்பமுண்ண—அறிவு.

உண்ணுவதுசாதகமாய்த்தள்ளவேணு
முற்றஅறுசுவையதனைநீக்கவேணும்
பண்ணுவதுசிவயோகம்பண்ணவேணும்
பார்வதியுஞ்சிவனுடையதீட்சைவேணும்
எண்ணுவதுமிதுகளெல்லாமிருந்தால்வேணு
மிறவாமலிருக்கவென்றால்கற்பமவேணும்
கண்ணுவதுகற்பமுண்ணப்பாத்திரங்கள்
காந்தத்தினருமைதனைக்காட்டுமேனே சுள

காந்தபாத்திரப்பெருமை.

காட்டுகிறேன்காந்தமதுமுந்நாற்றுள்ளே
கலந்துரைத்தபடியுருக்கிக்கருவில்வாரு
மூட்டுகிறேன்கிண்ணியைப்போல்வார்த்துக்கொண்டு
முனையானகிண்ணியிலேபாலைவார்த்தால்
ஆட்டுகிறேன்பொங்கியதுமேலேநிற்கு
மப்பனேகாந்தத்தினதிகம்பாரு
நாட்டுகிறேன்தயிர்போலாமந்தப்பாலை
நலமாகக்கொண்டிடநோய்நாடாதென்னே சுஅ

நாடாதகிண்ணியிலேகற்பமுண்ணு
நலமானவமுதுண்ணுபாலுமுண்ணு
தேடாதநெய்தேனுமுண்ணலாகும்



Digitized By Roja Muthiah Research Library

கிணந்தோறுங்கொண்டக்கால்சித்தியாகும்
ஓடாதுவிந்துவதுகீழ்நோக்காது
உறக்கந்தானுறுதுங்கட்டிப்போகும்
கூடாதசித்தியெல்லாங்கூடுங்கூடுங்
குறிப்பானரசமணியின்கூறுகேளே சகூ

## ரசமணி.

கூறானகாந்தத்தின்கிண்ணத்துள்ளே
கொட்டியதோரசத்தையின்னங்கூறக்கேளு
வீறானகருமத்தஞ்சாறுவிட்டு
வேகிறதோர்சுடுசோற்றுக்குள்ளேவைத்தால்
வேறானவானைவீறிட்டுச்சாகும்
வெள்ளியம்போலுந்தான்வலுத்துப்போகும்
பேறாகவெடுத்துமணிபதினாறாக்கிப்
பேணியேசெபஞ்செய்யவெட்டுமாமே. எக

## மணித்தொழில்.

ஆடுகிறமணியதனைசாரணையிற்றீர்ந்தா
லண்டாண்டஞ்சுத்திவருங்கெவுனமாகும்
கூடுகின்றபெண்ணோடேவாயிலிட்டால்
குடிகடுத்தவிந்துவதுகட்டிப்போகுந்
தேடுகின்றதேட்டெல்லாம்ரசமணிதானப்பா
தேடவென்றால்காந்தத்தின்கிண்ணங்கிண்ணம்
ஓடுகின்றவோட்டெல்லாங்காந்தத்தாலே
யுத்தமனேகற்பத்துக்குறுதியாமே. எஉ

Digitized By Roja Muthiah Research Library

அருளீதல்.

ஆமிந்தவுருதிசொல்லார்சித்தரெல்லா
மாதிதொடுத்தந்தவணையழகாய்ச்சொன்னேன்
ஓமிந்தநூல்போலார்வெளியாய்ச்சொன்னா
ரொளிததிட்டார்சித்தரெல்லாம்பேசிக்கொண்டு
நாமிந்தநூல்வழியாய்ச்சொன்னதென்ன
நாட்டிலுள்ளோரெல்லாருமாண்டுபோனார்
சாமிந்சப்படியானால்தோஷமென்று
தாகஙினேன்பூரணத்தில்சாயுச்சியந்தானே ௩௨

சமாதிகட்டும்வகை

சாயுச்யமாவதற்குச்சமாதிகேளு
சஞ்சாரசமாதியதுமவுனிக்காகும்
நீயுச்யமாகவென்றால்கருவைக்கேளு
நினைத்தகுகையாதாரம்போலுண்டாக்கி
மாயுச்பமாயதிலேபற்பம்போட்டு
மைனதனையதிலிருந்துகற்பமுண்ணு
வாயுச்யமானதொருயோகம்பாரு
வளமானசித்திவந்தால்மலையிலேறே. ௩௩

சித்தாகும்பருவம்.

ஏறியேயென்னைவந்துகண்டாயானா
லியலானசித்தனென்றுபேருமீய்வோம்
மாறியேழுலகளிலேசித்தர்கோடி
மாறுபட்டஞ்செய்திடுவார்மருவவேண்டாங்

Digitized By Roja Muthiah Research Library

தேறியேபொதிகையிலேமுன்னேவந்து
சித்தனென்றுபேர்வந்துமுத்திரையும்வாங்கி
யேறியேமலைகளிலேநடக்கலாகு
மித்தனைக்கும்வருவதுதானருமைதானே ௯௯

சிவவேடவகை

அருமையென்றசிவயோகம்வந்ததாலு
லதிகமாஞ்சித்தருக்குரூபங்கேளு
பெருமையென்றசட்டையொன்றுபிரம்பதொன்று
போனபடிகமணிகுண்டலத்தினோடு
தருமையென்றவுப்பினுடசாந்தாள்கையில்
சட்டையுண்டுகபிலாயவற்கமானால்
அருமையென்றவிபூதியுற்றளவுமாகி
யப்பனேயோகதண்டெம்முத்திரைகாணே. ௱

அகத்தியர்வேடம்–மூலகுருவேடம்.

நம்முடையமுத்திரைதானிடைகஷாயம்.
நாதனுடமுத்திரைதான்சிரசிலாகும்
தம்முடையவற்கத்திற்படிகலிங்கம்
தரிவானகமண்டலமுந்தரிப்பார்பாரு
அம்முடையதீட்சைவிதியோகமார்க்க
மான்ந்தமூலகுருவேடம்பாரு
கும்மென்றமேருவுக்குத்தெற்கேகேளு
கோடானகோடிசித்தர்கூடினாரே ௱௧

## சித்தர்களிடம்-உருவு.

### மேரு - நாலுதிக்கிலுள்ளசித்தர்ரூபம்.

கூடினார்மேற்கிலுள்ளசித்தர்கோடி
கூர்ப்பானவயதிருபத்திருநூறப்பா
தேடினல்வளர்தகிமுழம்நாற்பதாகுஞ்
சித்திக்குமேருவுக்குவடக்கேகேளு
நாடினல்வளர்த்தியதுநானூறாகும்
நலமானமூன்றுதிசைசித்தருக்கு
ஊடினார்கிழக்கதிலேவுரைக்கக்கேளு
வுத்தமனேவளர்த்தியதுநானூறெண்ணே ௭௭

நூறாகும்வயததுதான்முன்னிரட்டி
றுதனமாயிருப்பார்கள்கோடாகோடி
பேறாகுந்தெற்கிலுள்ளசித்தரெல்லாம்
பெருமைமெத்தப்பெருமைமெத்தப்பேசப்போகா
ஆறாகும்நாலுதிசைசித்தருக்கு
அடையாளமென்னுடையகர்ஷாயமாகும
வீறாகுஞ்சித்தருக்குமகுத்வந்தான்மெத்த
மெஞ்ஞானிசொரூபமடாவிளைந்துபாரே ௭௮

## பூசைவிதி-பிராணாயம்.

விளைந்துகற்பமுண்ணயிலேமுடிவளர்க்கவேண்டாம்
விடிவேருபல்விளக்கிநாக்குததேய்த்து
இளைந்துவருமவழலைசுத்திமூன்றுஞ்செய்து
திருநீற்றையுற்றளமாயணிந்துகொண்டு

Digitized By Roja Muthiah Research Library

பார்த அங்கநியாசம்காணியாசம்
பரிவானசடங்கமதுபிராணாயந்தான்
ஊர்தவருங்காயத்ரிதர்ப்பணமுமோமம்
உருவேற்றுமட்டகர்மஞ்சிவபூசையாமே ௭௯

புத்தி.

பூசையிலேவைத்தெடுத்துக்கற்பமுண்ணு
புகழாகச்சித்திக்கும்பேறுண்டாகும்
ஆசையிலேபேரின்பமடுத்தாயானு
லற்பமனதின்மாயைநீக்கிப்போடு
வேசியைப்போலாசைகொண்டாலெல்லாம்போச்சு
வேதாந்தம்நீயென்றுலொருமனதாய்நில்லு
காசில்லையென்றுசொல்லிவிட்டிடாதே
கற்பமுண்டால்வாதசித்திகைக்குள்ளாமே ௮௰

சுத்திமார்க்கம்.

கைக்குள்ளாய்வாதசித்திவருகவென்றால்
கருவையெல்லாஞ்சொல்லுகிறேன்கனிந்துகேளு
மெய்க்குள்ளாயைம்பதுக்குள்சொன்னேன்முப்பூ
வெளியாகச்சொல்லிவிட்டேன்சுத்தியில்லை
முக்கியமாஞ்சுத்திதனைச்சொல்லக்கேளு
முப்பத்திரண்டென்று கொங்கணர்தான்சொன்னார்
தெர்க்கிலேசொல்கிறேன்நீகேளுகேளு
சுத்தியுட்சுப்பிரத்தைச்சுருக்கித்தானே ௮௧



Digitized By Roja Muthiah Research Library

## முப்பூசுத்தி.

சுருக்கியேசொல்லுகிறேன்முப்பூவப்பா
துாக்குவாய்வகையொன்றுபலமொன்றாகச்
செருக்கியேபனிநீரைந்தநீரைவாங்கித்
தெளித்துநீவைத்திடுவாய்வெவ்வேறாக
நெருக்கியேவெய்யிலிலேகாயக்காய
நேராகவொன்றுக்குப்பத்துநாள்தான்
தருக்கியேவகையொன்றுசலம்படிதானொன்று
தாக்கியேவெய்யிலிலேகாய்ந்தபின்னே அ௨

காய்ந்தபின்மேலின்னமொருசுத்திகேளு
காசினியிலமுரியினால்முன்போற்காச்சு
வாய்ந்தபின்புதேசியின்னீர்தன்னில்முன்போல்
வளமானசாரநீர்தன்னில்முன்போல்
ஏய்ந்தபின்புமுப்பூவுமொன்றாய்ச்சேர்த்து
யிதமானகிளிஞ்சினீர்படிதான்வாங்கி
பாய்ந்திடவேபத்துமுறைதெளித்துநீயும
பரிவாகவற்றவற்றத்தெளியக்காய்ச்சே அ௩

## வெடியுப்புச்செயநீர்.

காய்ச்சியபின்இன்னமொருகருவைக்கேளு
கனமானவெடியுப்புப்புளியுங்கூட்டி
வாய்ச்சுதேயிடித்துநன்றாய்த்தீயைமூட்டு
வளமாகநீற்றியிதைச்சுண்ணம்பாக்கிப்
பாய்ச்சுவாய்நாழியொன்றுசாரத்தாலும்

Digitized By Roja Muthiah Research Library

பரிவாகப்பொடித்தாநன்றாய்ப்பனியில்வைக்க
ஆப்ச்சியாஞ்செயநீராமநீர் தன்னை
அரைப்படி தான்வாங்கிவைத்து அறையக்கேளே ()

## மூப்பூச்சுண்ணம்.

கேளப்பாவீரமொடுபூரஞ்சீனங்
கெடியானவுரமுடனேகுருவண்டுநாபி
சூளப்பாவகைபொன்றுசமுஞ்சியொன்று
சூட்டியேபொடித்தந்தநீரிற்போடு
நாளப்பாஇருந்துடனேசிவந்துபோகும்
நலமானசெயநீரில்போட்டுக்காச்சு
தேளப்பாகொட்டியதோர்சுண்ணவாச்சு
திடமாகஇடைக்கிடைதான்கூடன்சேரே அ௫

## கூடச்சுண்ணம்.

கூடனுக்குநேர்பாதிவீரங்கூட்டி
சுகமானபூநகதிலேகமுஞ்சுகூட்டிச்
தேடுகின்றவெடியுப்புநீராலாட்டிச்
சிறப்பாகவில்லைசெய்துரவியிற்போடு
காடவேகாய்ந்தபின்போட்டில்வைத்துமூடி
நலமாகச்சந்துவாய்சீலைசெய்து
போடவேமுடப்புமத்திற்சுண்ணமாகும்
பேர்க்கதிலேசொல்லுகிறேன்புகழ்ந்துபாரே அசு

## தரிசிச்சுண்ணம்.

புகழான்சுண்ணத்தில்மஞ்சாடிவாங்கி

ROJA MUTHIAH
47. HOSPITAL STREET
KOTTAIYUR—623 106.

Digitized By Roja Muthiah Research Library

பூசுவாய் துரிசிக்குவாய்நீராலே
சுகமானவெய்யிலிலேகாயவைத்துச்
சொல்லுகிறேன் பூநீற்றில் சீலைசுற்றி
யசுகமானவோட்டில்வைத்துவோடுமூடி
யப்பனேசந்துவாய்சீலைசெய்து
மூகமானமூன்றெருவில்புடத்தைப்போடு
முக்கியமாய்நீறும்பின்பெடுத்துக்கொள்ளே ௮௭

தாளகச்சுண்ணம்.

எடுத்ததொருதுரிசினீர்வேகமெத்த
என்சொல்வேனிரதத்தைச்சுண்ணிக்கொல்லும்
அடுத்ததொருதுரிசினீர்வீரங்கூட்டி
அழகானதாளகத்திலப்பிப்போடத்
தொடுத்ததொருபுடத்தினிலேவெளுத்துநீறுஞ்
சுகமானவுபாசங்களீயமாகுங்
கொடுத்திடவேபத்தமையுந்தப்பாதப்பா
கோடானகோடிகவராடும்பாரே ௮௮

நூலின்பெருமை.

ஆடியதோர்முப்பூவின்கருவையெல்லா
மறைப்பறுச்சொல்லிவிட்டேனலையவேண்டாம்
தேடியதோர்கருக்கெளல்லாம் வெளியாய்ப்போச்சு
செகத்திலேகிட்டுகிலோசித்தராச்சு
மூடியதோர்கருவெல்லாந்துறந்தேனென்று
மோசமென்றிந்நூலையொளித்திட்டார்கள்

Digitized By Roja Muthiah Research Library

நாடியேநானெடுத்துப்பாவநாச
நற்றீர்த்தக்கரைதனிலேவைத்திட்டேனே ௮௬

## நூல்வந்தவழி.

வைத்திட்டநூலெடுத்தாரொருவேளாளன்
வந்ததடாஇப்படித்தானுலகத்துள்ளே
கைத்திட்டமானபலனிந்தநூல்தான்
கசடருக்கும்பசகளுக்குங்காணாதோடும்
பொய்த்திட்டசாத்திரங்களெல்லாமெய்தான்
போக்கரியவிந்நூலைப்பேணிப்பாரு
மெய்த்திட்டகருவெல்லாந்தோயுந்தோயு
மீசுரனுந்தேவியுந்தானிறைஞ்சுவாரே ௮௭

## சவுக்காரவைப்பு.

இறைஞ்சுவார்சவுக்காரவைப்பைக்கேளா
பியலானஉவருப்புஅமரியுப்பு
மறைவானகல்லுப்புவெடியுப்போடு
மருவியதோர்கல்லானைக்கிளிஞ்சிற்சுண்ணம்
நிறமானசூடனொடுபாரையுப்பு
நேராகச்சட்டமுனிகொங்கணர்தான்சொன்னார்
குறையாமல்முறைக்குவைத்துக்கொண்டு
கூசாமல்சட்டமுனிசொன்னமார்க்கம் ௮௮
சொன்னபடிபெண்ணைதனைக்கழற்றியேபோடு
சூட்சமாய்க்கடுங்காரமேற்றியேதான்
திண்ணமாய்க்கல்லுப்பைக்கட்டிக்கொண்டு

Digitized By Roja Muthiah Research Library

நலமானவித்தையெல்லாமாடிப்பாரு
பொன்னதிலேயுண்டாகுங்குளிகைகட்டி
பொதிகைதனில்வந்தென்னைக்கண்டுசேவி
யின்னமொருசேதியண்டுசொல்லக்கேளு
இதமானவறுசுவையுங்கழற்றுவாயே ௬௨

சுந்தரானந்தர்முறைகற்பம்.

கழற்றுவாய்சுந்தரான்றந்நூலைப்பார்த்துக்
கடுக்காயைக்கொண்டுவிடுவருஷமொன்று
தளத்துடனேமிளகுதனைக்கொண்டாயானல்
சடத்திலுள்ளநோயெல்லாந்தானேபோச்சு
சுழற்றுகின்றநூல்களெல்லாஞ்சுருக்கிச்சொல்வேன்
றுடியானவல்லாரைக்கற்பத்தேதான்
இளைத்துநீபோகாமல்வருடங்கொண்டா
லிருத்துமடாஇருநாறுண்டிருந்துகாணே ௬௩

குளிகைசெய்கை.

ஆண்டிருக்கச்செய்துகொண்டுவயக்காந்தத்தை
யப்பனேகொண்டுவிடுவருடமொன்று
பூண்டிருக்கும்பிறகுகொள்ளுகற்பமெல்லாம்
புகழாகமுப்பூவைமுடித்துக்கொண்டு
ஏன்றதொருவேதைதனைக்கண்டுகொண்டு
இரதமென்றஆனைதனைக்குளிகைசெய்து
மூன்றதொருகுளிகைக்குச்சாரணைதானீக்கு
முன்பாகத்தங்கமொடுசூதங்கூட்டே ௬௪

Digitized By Roja Muthiah Research Library

இரசச்செந்தூரம்.

கூட்டியேகெந்திதனைக்குப்பிக்கேற்றி
குலாவியேசெந்தூரஞ்செய்துகொண்டு
நாட்டியேவருடமொன்றுகொண்டாயானால்
நமனில்லைகோடிவரையிருத்தும்பாரு
பூட்டியேவாசிதன்னைக்கூட்டிக்கொண்டு
புதுமையுள்ளமலைமேலேயேறியேதான்
ஆட்டியேமலையிலுள்ளகற்பங்கொள்ளு
அதிகமாய்ரிஷிகளைநீதெரிசித்தேதான் ௯௫

சித்திரைக்காணத்தியானம்.

அடுக்கும்வகை.

தெரிசிக்கத்தியானமொன்றுசொல்லக்கேளாய்
சிவாயநம ஓம் கிலீம் என்றுசேவி
வரிசிக்குஞ்சித்தரெல்லாம்வெளியிற்காணு
மகத்தானசித்தாப்பாவணங்கிநில்லு
பரிசிக்கும்படியவரைக்கண்டாயானால்
பணிந்திடுவாய்பாதத்திற்சிரசுதட்ட
கிரிசிக்கும்ஆர்நூலிற்சார்ந்தாயென்று
கேட்கிலகத்திசார்தன்கிருபையென்னை ௯௬

சித்தர்மகத்துவமளித்தல்.

என்னுடையபேர்சொல்லிக்கூட்டிக்கொண்டு
-பிசையானபொதிகையிலேயேறுவார்பார்

Digitized By Roja Muthiah Research Library

உன்னுடையதிறங்கண்டபோதுதானே
யுறுதியுள்ளசித்தனென்றுபேருமீய்வேன்
மின்னுடையவொளிகாட்டியறுதலமுங்காட்டி
மெய்ஞ்ஞானவீடுபெறநிலையுங்காட்டி
பன்னுடையசிதம்பரமுமேருபூசை
பாலிப்போமஷ்டாங்கம்புரிந்துகாணே சூஎ

யோகிகளுக்கிருப்பிடவிசேடதலம்.

பரிவானயோகிக்குத்தலத்தைக்கேளாய்
பகருவேன்காசிவரைகன்னிமட்டுந்
தெரிவானமலைசசார்புமெததநன்று
தேசத்தில்நாடதிகஞ்சோழதேசம்
அரிவானபாண்டியிலேவைகைநாடு
அடுத்ததொருகள்ளர்பத்து அழகர்கோவில்
உரிதானதிண்டுக்கல்காளையார்கோவி
லுறவானமதுரையொடுகுன்றுறுமே சூஅ

ஆறானதாம்பிரவேணிகரைப்போக்கெல்லா
மாமடாவெகுசித்திபொதிகைச்சார்பு
கூறானசிதம்பரமுஞ்சாவேரிப்போககுங்
கொள்ளுகிறகற்பமெல்லாஞ்சித்தியாகும்
நூறானகன்னியிலேகுமரிநின்றாள்
நுற்பனமாய்வாலையடா அவள்தானப்பா
பேறாகும்நான்சொன்னதலங்களுக்குப்
பேதமில்லைபேதமுண்டுபேசுதேனே சூகூ

## பேதபூமி.

பேசுவதுசமுத்திரத்துக்கப்பாற்பத்துப்
போனகடிகையதுமேற்கேசென்று
வீசுறதோர்கற்பங்களுண்ணவேணும்
மெய்ஞ்ஞானிக்கெங்குமாம்வேதாந்திக்கும்
ஆசுறதோர்தலமதிகம்நிலமதிகப் பாரு
அப்பனேகுளிர்ந்ததலமாகுமாகுங்
கூசுறதோரென்னவென்றால்ராசநீதங்
குவலயத்தில்மனுநீதங்கொள்கைபாரே ௱

## புத்தி.

பாரப்பாசமாதியிலேயிருக்கும்போதும்
பலபலவாந்தொழில்முறைகள்செய்யும்போது
நேரப்பாபல்கூட்டங்கூடலாகா
நெறிகெட்டசீடர்களைச்சேர்க்கலாகா
ஆரப்பாதனியேதானிருந்துகொண்டு
அளவறந்தவித்தையெல்லாமாடுமாடுஞ்
சீரப்பாதேகசித்தியோகசித்தி
செயமானமலைகளிலேசேர்ந்துகொள்ளே. ௱௧

## பூமிநாதம்விளைபூமி.

கொள்ளென்றகுமரிக்குமேற்கேசேரப்
கூறுவேன்பதின்காதங்குணமாம்பூமி
விள்ளென்றபூமிதனிற்பூமிநாதம்
விளைந்திடுங்குந்தலங்களையான்விரித்துச்சொல்வேன்

Digitized By Roja Muthiah Research Library

உள்ளென்றகாசிக்குந்தெற்கேபத்து
வுறவானகடிகைகட்பூமியொன்று
என்னென்றபூமிக்குக்கிழக்கேகாணு
மிருபதுநாழிகைக்குள்ளேதலமொன்றுண்டே ()

உண்டப்பாமுன்சொன்னதலத்துக்கப்பால்
யோசனைதானொன்றுசென்றால்தலமொன்றுண்டு
நன்றப்பாவதின்பிறகுமேற்கேசென்றால்
நலமானகடிகைபத்துமலைச்சார்புக்குள்
சென்றப்பாபார்த்தக்கால்தலமொன்றுண்டு
சித்தரிடமாட்டஞ்சொல்லப்போகா
இன்றப்பாசொல்லுகிறேன்விளாடபுரந்தன்னில்
வெகுவீதியொருதலந்தான்விசாலமெத்தவாமே. ()

தலவிசேடமகத்துவம்

மெத்தவடாடில்லிக்குமேற்கதாக
விருதானதலங்களுண்டுமேவிப்பாரு
சித்தாப்பாகஞ்சமலைச்சித்தர்வாழ்க்கை
திரண்டதொருமலையுண்டுவதற்குள்ளப்பா
வுத்தமமாங்குருநாட்டில்ஞாலந்தானென்று
வுபர்ந்தமலையதுதானேசித்தருக்கு
வெற்றியுள்ளகன்னடியர்தேசந்தன்னில்
மேலானவயிந்தநகர்தலந்தானென்றே சச

தல்மானஆற்காட்டின்மேற்கேபத்து
சீர்ந்தக்காலங்கனென்றலமொன்றுண்டு

Digitized By Roja Muthiah Research Library

பேல்மானகாவேரிபூமிதன்னில்
　　பெருத்ததொருதலமொன்றுசிரங்கத்தில்
நிலமானகோகாணத்துக்கப்பாலேதான்
　　நெடுந்தூரஞ்சென்றுக்கால்தலமொன்றுண்டு
குலமான திண்டுக்கல்தேசந்தன்னில்
　　குணமானதலமொன்றுகூர்ந்துபாரே. ௱ரு

கூர்ந்துபார்கள்ளரிடதேசந்தன்னில்
　　குணமானதலமொன்றுவள்ளலூரில்
சேர்ந்துபார்மதுரைக்குத்தெற்கதாகத்
　　திறமானகடிகைபத்துக்கப்பாலொன்று
ஏர்ந்துபாரதற்கப்பால்கடிகையைந்து
　　எல்லையிலேதலமொன்றுஇருக்கும்பாரு
தீர்ந்துபார்மதுரைக்குக்கிழக்கேயப்பா
　　சேர்ந்துபத்துக்காதத்துக்கப்பாற்சொல்லே ௱சா

செல்லவேவலையல்செய்யும்பேர்களுண்டு
　　செயமானதலமதிகஞ்சேர்ந்துபாரு
மெல்லவேயதின்கிழக்குமறவர்நாட்டில்
　　வெகுதலங்களுண்டுசமுத்திரம்வரைக்கும்
நல்லதொருகல்லுப்புக்கடலிலுண்டு
　　நலமானசமுத்திரத்தின்ஸ்ரீராமர்பிரதிஷ்டை
வல்லதொருநாட்டுக்குள்தலமொன்றுண்டு
　　மைந்தனேதாய்பிரவேணிவளமைகேளே ௱எ

Digitized By Roja Muthiah Research Library

